# श्री महालक्ष्मि स्तुतिः

# ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஸ்துதி









# ஸ்ரீ ராமஜெயம்

ஓம் விக்னேச்வர மஹாபாக
ஸர்வலோக நமஸ்க்ருத|
மயாரப்தமிதம் கர்ம நிர்விக்னம்
குரு ஸர்வதா ||

ॐ विघ्नेश्वरमहाभाग सर्वलोकनमस्कृत |

मयारब्धमिदं कर्म निर्विघ्नं कुरु सर्वदा ॥

# முகவுரை

அளப்பரிய மகிமை பொருந்திய இந்த மஹாலக்ஷ்மி ஸ்தோத்திரத்தை அச்சிடும் பேறு பெற்றமைக்கு மஹாலக்ஷ்மித் தாயாருக்குக் கோடானுகோடி நமஸ்காரங்கள். இந்த ஸ்துதியில் வரும் அன்னையின் பல்வேறு நாமங்கள் நம் வாழ்வின் அனைத்து நிலைகளிலும் இருந்துகொண்டு நமக்கு அருள் பாலிக்கும் அன்னையின் கருணையை நமக்கு உணர்த்துகின்றன. அன்பு, அறிவு, ஆற்றல், அருள், கருணை, முயற்சி, உழைப்பு, செல்வம், இன்பம், கலை, கல்வி, வீரம், வெற்றி, திறமை, ஆளுமை, பக்தி, முக்தி, ஆனந்தம்.....இவ்வாறாக வாழ்வின் அம்சங்கள் அனைத்தும் ஸ்ரீலக்ஷ்மியின் பிம்பமே. இந்த ஸ்லோகத்தினைப் படிக்கும்பொழுது இதை எல்லோரும் உணர்ந்து இன்புற வேண்டி ஸ்துதியின் தமிழ் உரையும் கூடவே வழங்கப்பட்டுள்ளது. எம் சிற்றறிவுக்கு எட்டிய வகையில் கொடுக்கப்பட்டுள்ள இந்தத் தமிழ் உரையில் குற்றம், குறைகள் இருப்பின், தயை கூர்ந்து மன்னிக்க வேண்டுகிறோம். மேலும், எடுத்துக்காட்டப்படும் தவறுகளை ஏற்றுக்கொண்டு அவற்றைத் திருத்திக்கொள்ளச் சித்தமாயிருக்கிறோம் எனத் தெரிவித்துக்கொண்டு மூன்றுலகையும் ஆளும் புவனேச்வரியாகிய அன்னை ஸ்ரீமஹாலக்ஷ்மியை வணங்கி அமைகிறோம்.

இப்படிக்கு,

**V. Krishnamurthy Sastrigal (Kitcha Vadhyar)**
Tel: 044 2442 4072
Mobile: 94442 68208
Email: officecare@gmail.com

**குறிப்பு - இந்தப் புத்தகம் விற்பனைக்கு அன்று**

# श्री महालक्ष्मी स्तुतिः

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஸ்துதி



**இந்த மஹாலக்ஷ்மி ஸ்தோத்திரம் பழைய கையெழுத்துச் சுவடி ஒன்றிலிருந்து நமது ஸத்குருநாதர் ஸ்ரீகிருஷ்ணானந்த ஸ்வாமிகள் அவர்களால் தேடியெடுக்கப்பட்டு அருளப்பட்டது. தினமும் இந்த ஸ்தோத்திரத்தை சொல்லி வந்தால் லக்ஷ்மி கடாக்ஷம், மஹைதைச்வர்யம், ஸந்தானப்ராப்தி முதலிய ஸகலவித க்ஷேமங்களையும் அடையலாம். முக்கியமாக வரும் நவராத்திரி 10 நாட்களும் காலை, மாலை இதை பக்தி சிரத்தையுடன் சொல்வது எல்லாவித க்ஷேமங்களையும் தரும்.**

# श्री महालक्ष्मी स्तुतिः

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஸ்துதி

शुद्धलक्ष्म्यै बुद्धिलक्ष्म्यै वरलक्ष्म्यै नमो नमः ।
नमस्ते सौभाग्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १

சுத்தலக்ஷ்ம்யை புத்திலக்ஷ்ம்யை வரலக்ஷ்ம்யை நமோ நம: |
நமஸ்தே ஸௌபாக்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம: || 1

वचोलक्ष्म्यै काव्यलक्ष्म्यै गानलक्ष्म्यै नमो नमः ।
नमस्ते शृङ्गारलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ २

வசோலக்ஷ்ம்யை காவ்யலக்ஷ்ம்யை காநலக்ஷ்ம்யை நமோ நம : |
நமஸ்தே ச்ருங்காரலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 2

धनलक्ष्म्यै धान्यलक्ष्म्यै धरालक्ष्म्यै नमो नमः ।
नमस्तेऽष्टैश्वर्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ३

தநலக்ஷ்ம்யை தான்யலக்ஷ்ம்யை தராலக்ஷ்ம்யை நமோ நம : |
நமஸ்தே அஷ்டைச்வர்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம:|| 3

गृहलक्ष्म्यै ग्रामलक्ष्म्यै राज्यलक्ष्म्यै नमो नमः ।
नमस्ते साम्राज्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ४

க்ருஹலக்ஷ்ம்யை க்ராமலக்ஷ்ம்யை ராஜ்யலக்ஷ்ம்யை நமோ நம : |
நமஸ்தே ஸாம்ராஜ்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 4

शान्तिलक्ष्म्यै दान्तिलक्ष्म्यै क्षान्तिलक्ष्म्यै नमो नमः ।
नमोऽस्त्वात्मानन्दलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ५

சாந்திலக்ஷ்ம்யை தாந்திலக்ஷ்ம்யை க்ஷாந்திலக்ஷ்ம்யை நமோ நம : |
நமோऽஸ்து ஆத்மானந்த லக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம:|| 5

सत्यलक्ष्म्यै दयालक्ष्म्यै सौख्यलक्ष्म्यै नमो नमः ।
नमः पातिव्रत्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ६

ஸத்யலக்ஷ்ம்யை தயாலக்ஷ்ம்யை ஸௌக்கியலக்ஷ்ம்யை நமோ நம: |
நம: பாதிவ்ரத்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 6

# ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஸ்துதி

1. மாசற்ற வடிவினளான சுத்த லக்ஷ்மிக்கு, புத்தி வடிவினளான புத்தி லக்ஷ்மிக்கு, வரங்களையெல்லாம் அருளும் வரலக்ஷ்மிக்கு நமஸ்காரம். ஸௌபாக்கியங்களையளிக்கும் ஸௌபாக்கியலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

2. வாக்கு ரூபமாய் இருக்கும் வசோலக்ஷ்மிக்கு, காவ்ய வடிவமாய்த் திகழும் காவ்ய லக்ஷ்மிக்கு, சங்கீத ரூபிணியாய் இசையாய் விளங்கும் கானலக்ஷ்மிக்கு நமஸ்காரம். லலிதமும், நளினமும் பொருந்திய ச்ருங்காரலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

3. செல்வங்களைப் பொழியும் தனலக்ஷ்மிக்கு, தான்யங்களையெல்லாம் வழங்கும் தான்யலக்ஷ்மிக்கு, அனைத்தையும், அனைவரையும் தாங்கும் இந்த பூவுலக வடிவாயிருக்கும் தராலக்ஷ்மிக்கு நமஸ்காரம். அஷ்ட ஐச்வர்யங்களையும் அளிக்கும் அஷ்டைச்வர்ய லக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே, உனக்கு நமஸ்காரம்.

4. நாம் வசிக்கும் க்ருஹரூபத்தில் இருந்துகொண்டு, நம்மைப் பேணிப் பாதுகாக்கும் க்ருஹலக்ஷ்மிக்கு, நாம் வாழும் இடமாக இருந்து, நமக்கு வாழ்வாதாரத்தை வழங்கும் கிராமலக்ஷ்மிக்கு, ராஜ்யங்களையருளும் ராஜ்யலக்ஷ்மிக்கு நமஸ்காரம். அனைத்துலகையும் ஆளும் ஸாம்ராஜ்யலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

5. உணர்ச்சிகளுக்கு வயப்படாமல் அமைதியாய் இருக்கும் தன்மையை அருளும் சாந்திலக்ஷ்மிக்கு, எந்த சூழ்நிலையிலும் பதட்டம் கொள்ளாமல் இருக்கும் திண்மையை வழங்கும் தாந்திலக்ஷ்மிக்கு, எத்தகைய பேரிடர் வரினும் கலங்காமல் பொறுமையுடன் சமாளிக்கும் இயல்பை வழங்கும் க்ஷாந்திலக்ஷ்மிக்கு நமஸ்காரம். ஆத்மானந்த அனுபவம் நல்கும் ஆத்மானந்தலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

6. உண்மை வடிவான ஸத்யலக்ஷ்மிக்கு, கருணை வடிவான தயாலக்ஷ்மிக்கு, ஸௌக்கியங்களையருளும் ஸௌக்கியலக்ஷ்மிக்கு நமஸ்காரம், பதிவிரதைகளுக்குரிய இயல்பாகிய பாதிவ்ரத்ய ரூபமாயிருக்கும் பாதிவ்ரத்ய லக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

गजलक्ष्म्यै राजलक्ष्म्यै तेजोलक्ष्म्यै नमो नमः ।

नमः सर्वोत्कर्षलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ७

கஜலக்ஷ்ம்யை ராஜலக்ஷ்ம்யை தேஜோலக்ஷ்ம்யை நமோ நம : |

நம: ஸர்வோத்கர்ஷலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 7

सत्वलक्ष्म्यै तत्वलक्ष्म्यै बोधलक्ष्म्यै नमो नमः ।

नमस्ते विज्ञानलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ८

ஸத்வலக்ஷ்ம்யை தத்வலக்ஷ்ம்யை போதலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே விஜ்ஞானலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 8

स्थैर्यलक्ष्म्यै वीर्यलक्ष्म्यै धैर्यलक्ष्म्यै नमो नमः ।

नमस्तेऽस्त्वौदार्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ९

ஸ்தைர்யலக்ஷ்ம்யை வீர்யலக்ஷ்ம்யை தைர்யலக்ஷ்ம்யை நமோ நம: |

நமஸ்தேऽஸ்து ஔதார்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம:|| 9

सिद्धिलक्ष्म्यै ऋद्धिलक्ष्म्यै विद्यालक्ष्म्यै नमो नमः ।

नमस्ते कल्याणलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १०

ஸித்திலக்ஷ்ம்யை ருத்திலக்ஷ்ம்யை வித்யாலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே கல்யாணலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 10

कीर्तिलक्ष्म्यै मूर्तिलक्ष्म्यै वर्चोलक्ष्म्यै नमो नमः ।

नमस्ते त्वनन्तलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ ११

கீர்த்திலக்ஷ்ம்யை மூர்த்திலக்ஷ்ம்யை வர்ச்சோலக்ஷ்ம்யை நமோ நம:|

நமஸ்தே து அநந்தலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம: || 11

जपलक्ष्म्यै तपोलक्ष्म्यै व्रतलक्ष्म्यै नमो नमः ।

नमस्ते वैराग्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १२

ஜபலக்ஷ்ம்யை தபோலக்ஷ்ம்யை வ்ரதலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே வைராக்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 12

7. கஜங்கள் புடைசூழ அமர்ந்து வளங்களை வாரி வழங்கும் கஜலக்ஷ்மிக்கு, அரசாளும் ஆளுமைத்திறனை அளிக்கும் ராஜலக்ஷ்மிக்கு, நற்பண்புடைய சான்றோர், தருமநெறிப்படி வாழும் மேன்மக்களின் முகத்தில் பொலியும் காந்தி வடிவில் இருக்கும் தேஜோலக்ஷ்மிக்கு நமஸ்காரம். அனைவரும் மேன்மையுடனும், சீரும், சிறப்புடனும் எல்லாவளங்களுடனும் வாழ அருள்புரியும் ஸர்வோத்கர்ஷ லக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

8. ஸத்வ குணமே வடிவான ஸத்வலக்ஷ்மிக்கு, தத்துவப்பொருளாய் விளங்கும் தத்வலக்ஷ்மிக்கு, தத்துவங்களை உணர்ந்து கொள்ளும் அறிவு ருபமாய் விளங்கும் போதலக்ஷ்மிக்கு நமஸ்காரம். தேர்ந்து தெளியும் அறிவை வழங்கும் விக்ஞானலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

9. மனஉறுதியை அளிக்கும் ஸ்தைர்யலக்ஷ்மிக்கு, சக்தியையும் வீரத்தையும் வழங்கும் வீர்யலக்ஷ்மிக்கு, எதனையும் எதிர்கொள்ளும் துணிவை வழங்கும் தைர்யலக்ஷ்மிக்கு நமஸ்காரம். கருணையுள்ளம் கொண்டோரிடம் காணும் உதாரகுணமென்னும் பண்பாய் துலங்கும் ஔதார்யலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

10. எல்லா ஸித்திகளையும் அளிக்கவல்ல ஸித்திலக்ஷ்மிக்கு, எல்லா செல்வங்களையும் அருளவல்ல ருத்திலக்ஷ்மிக்கு, எல்லா வித்யைகளையும் வழங்கவல்ல வித்யாலக்ஷ்மிக்கு நமஸ்காரம். எல்லா மங்களங்களையும் அருளும் கல்யாணலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

11. என்றும் குன்றாத புகழையளிக்கும் கீர்த்திலக்ஷ்மிக்கு, என்றும் குறையாத தோற்றப் பொலிவை வழங்கும் மூர்த்திலக்ஷ்மிக்கு, பேராற்றலையும், தேர்ந்த செயல்திறனையும் தன்னகத்தே கொண்டு பிரகாசிக்கும் வர்ச்சோலக்ஷ்மிக்கு நமஸ்காரம். எல்லையில்லா மகிமைகள் பொருந்திய அனந்தலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

12. ஜபவடிவில் அனுக்ரஹம் செய்யும் ஜபலக்ஷ்மிக்கு, மாந்தர் செய்யும் தவங்களின் பயனாய் விளங்கும் தபோலக்ஷ்மிக்கு, விரதங்களைக் கிரமமாய் அனுஷ்டிப்போருக்கு வேண்டுவதையெல்லாம் அளிக்கும் வ்ரதலக்ஷ்மிக்கு நமஸ்காரம். பற்றுக்களிலிருந்து விடுவித்து முக்திக்கான வைராக்யத்தைத் தந்தருளும் வைராக்யலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

मन्त्रलक्ष्म्यै तन्त्रलक्ष्म्यै यन्त्रलक्ष्म्यै नमो नमः ।
नमो गुरुकृपालक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १३
மந்த்ரலக்ஷ்ம்யை தந்த்ரலக்ஷ்ம்யை யந்த்ரலக்ஷ்ம்யை நமோ நம : |
நமோ குருக்ருபாலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 13

सभालक्ष्म्यै प्रभालक्ष्म्यै कलालक्ष्म्यै नमो नमः ।
नमस्ते लावण्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १४
ஸபாலக்ஷ்ம்யை ப்ரபாலக்ஷ்ம்யை கலாலக்ஷ்ம்யை நமோ நம : |
நமஸ்தே லாவண்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 14

वेदलक्ष्म्यै नादलक्ष्म्यै शास्त्रलक्ष्म्यै नमो नमः ।
नमस्ते वेदान्तलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १५
வேதலக்ஷ்ம்யை நாதலக்ஷ்ம்யை சாஸ்த்ரலக்ஷ்ம்யை நமோ நம : |
நமஸ்தே வேதாந்தலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 15

क्षेत्रलक्ष्म्यै तीर्थलक्ष्म्यै वेदिलक्ष्म्यै नमो नमः ।
नमस्ते सन्तानलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १६
க்ஷேத்ரலக்ஷ்ம்யை தீர்த்தலக்ஷ்ம்யை வேதிலக்ஷ்ம்யை நமோ நம : |
நமஸ்தே ஸந்தானலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 16

योगलक्ष्म्यै भोगलक्ष्म्यै यज्ञलक्ष्म्यै नमो नमः ।
क्षीरार्णव पुण्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १७
யோகலக்ஷ்ம்யை போகலக்ஷ்ம்யை யக்ஞலக்ஷ்ம்யை நமோ நம : |
க்ஷீரார்ணவ புண்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 17

अन्नलक्ष्म्यै मनोलक्ष्म्यै प्रज्ञालक्ष्म्यै नमो नमः ।
विष्णुवक्षोभूषलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १८
அன்னலக்ஷ்ம்யை மநோலக்ஷ்ம்யை ப்ரக்ஞாலக்ஷ்ம்யை நமோ நம : |
விஷ்ணுவக்ஷோபூஷ லக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 18

13. மந்த்ரரூபமாய் விளங்கும் மந்த்ரலக்ஷ்மிக்கு, தந்த்ர சாஸ்திரத்தின் சாரமாய் விளங்கும் தந்த்ரலக்ஷ்மிக்கு, யந்த்ர வழிபாட்டில் யந்த்ர ரூபமாய் இருந்து வழிகாட்டி அருள்பாலிக்கும் யந்த்ரலக்ஷ்மிக்கு நமஸ்காரம். வழிகாட்டும் குருவின் கருணையாய் பரிமளிக்கும் குருக்ருபாலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

14. மேன்மக்கள் கூடும் அரங்கமாகவும், அவ்வரங்கத்தில் சான்றோரால் பேசப்படும் உயர்ந்த பொருளாயும் ஓரே சமயத்தில் திகழும் ஸபாலக்ஷ்மிக்கு, இந்தப் பிரபஞ்சத்தில் ஒளிரக்கூடிய அனைத்திலும் ஒளிரும் ஒளியாய் விளங்கும் ப்ரபாலக்ஷ்மிக்கு, பாரிலுள்ள அனைத்து கலைகளின் ரூபத்தில் திகழ்ந்து கவிஞர்களுக்கும், கலைஞர்களுக்கும் அருள் புரியும் கலாலக்ஷ்மிக்கு நமஸ்காரம். அழகும், நளினமும் கூடிய அனைத்திலும் பரிமளிக்கின்ற லாவண்ய லக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

.15. வேதப்பொருளாய் விளங்கும் வேதலக்ஷ்மிக்கு, நாதரூபிணியாய்த் திகழும் நாதலக்ஷ்மிக்கு, சாஸ்திரங்களின் சாராம்சமாய் விளங்கும் சாஸ்திர லக்ஷ்மிக்கு நமஸ்காரம். வேதங்களின் சாரமாய் திகழும் வேதாந்தலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

16. ஆலயம், மனமெனும் கருவறையில் இறைவனைஅமர்த்திக் கொண்டாடும் மனிதர்களின் சரீரம் எனும் க்ஷேத்திரம், அதர்மத்தை அழித்து தர்மம் நிலைநிறுத்தப்படும் களம் என்று இவ்வாறாகப் பல வடிவில் க்ஷேத்ரமெனப் பரிமளித்து மக்களுக்கு அருள் புரியும் க்ஷேத்ரலக்ஷ்மிக்கு, பாவங்களைப் போக்கும் புண்ணிய நதிகளின் புனிதத்தன்மையாய் விளங்கும் தீர்த்தலக்ஷ்மிக்கு, நல்ல கலைகள் அரங்கேறும், புனித யக்ஞங்கள் நடத்தப்படும் மேடையாய் விளங்கும் வேதிலக்ஷ்மிக்கு நமஸ்காரம். மக்கட்பேறு அளிக்கும் ஸந்தானலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

17. யோக மார்க்கத்தில் ஈடுபடுவோர்க்கு நல்சித்திகளை அளிக்கும் யோகலக்ஷ்மிக்கு, வாழ்வில் நல்போகங்களை அனுபவிக்க வகை செய்யும் போகலக்ஷ்மிக்கு, யாகமாகவும், யாகத்தின் பயனாகவும் விளங்கும் யக்ஞலக்ஷ்மிக்கு நமஸ்காரம். பாற்கடலில் உதித்த பரிசுத்தமான புண்யலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

18. அனைத்து ஜீவராசிகளையும் அன்னமளித்துப் போஷிக்கும் அன்னலக்ஷ்மிக்கு, மனோரூபமாய் செயல்பட்டு மனிதர்களை ஆளும் மனோலக்ஷ்மிக்கு, தன்னைத்தான் அறியும் ஆத்மபோதம் எனப்படும் பிரக்ஞையாக செயல்படும் பிரக்ஞாலக்ஷ்மிக்கு நமஸ்காரம். விஷ்ணுவின் திருமார்பை அலங்கரிக்கும் மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

धर्मलक्ष्म्यै अर्थलक्ष्म्यै कामलक्ष्म्यै नमो नमः ।

नमस्ते निर्वाणलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ १९

தர்மலக்ஷ்ம்யை அர்த்தலக்ஷ்ம்யை காமலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே நிர்வாணலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 19

पुण्यलक्ष्म्यै क्षेमलक्ष्म्यै श्रद्धालक्ष्म्यै नमो नमः ।

नमस्ते चैतन्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ २०

புண்யலக்ஷ்ம்யை க்ஷேமலக்ஷ்ம்யை ச்ரத்தாலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே சைதன்யலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 20

भूलक्ष्म्यै ते भुवर्लक्ष्म्यै सुवर्लक्ष्म्यै नमो नमः ।

नमस्ते त्रैलोक्यलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ २१

பூலக்ஷ்ம்யை தே புவர்லக்ஷ்ம்யை ஸுவர்லக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே த்ரைலோக்ய லக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 21

महालक्ष्म्यै जनलक्ष्म्यै तपोलक्ष्म्यै नमो नमः ।

नमः सत्यलोकलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ २२

மஹாலக்ஷ்ம்யை ஜநலக்ஷ்ம்யை தபோலக்ஷ்ம்யை நமோ நம : |

நம: ஸத்யலோகலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 22

भावलक्ष्म्यै वृद्धिलक्ष्म्यै भव्यलक्ष्म्यै नमो नमः ।

नमस्ते वैकुण्ठलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ २३

பாவலக்ஷ்ம்யை வ்ருத்திலக்ஷ்ம்யை பவ்யலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே வைகுண்டலக்ஷ்ம்யை மஹாலக்ஷம்யை நமோ நம : || 23

नित्यलक्ष्म्यै सत्यलक्ष्म्यै वंशलक्ष्म्यै नमो नमः ।

नमस्ते कैलासलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः ॥ २४

நித்யலக்ஷ்ம்யை ஸத்யலக்ஷ்ம்யை வம்சலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே கைலாஸலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 24

19. தர்மஸ்வருபமாய் விளங்கும் தர்மலக்ஷ்மிக்கு, இவ்வுலக வாழ்க்கைக்குத் தேவையான பொருட்செல்வமாய் விளங்கும் அர்த்தலக்ஷ்மிக்கு, செயலுக்கு ஆதாரமாய் விளங்கும் இச்சையாய் திகழ்கின்ற காமலக்ஷ்மிக்கு நமஸ்காரம். மனிதர்களை பந்தபாசங்களிலிருந்து விடுவித்து முக்திநிலையை அனுக்ரஹிக்க வல்ல நிர்வாணலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

20. புண்யங்களை வழங்கும் புண்யலக்ஷ்மிக்கு, ஸௌக்கியங்களை அருளும் க்ஷேமலக்ஷ்மிக்கு, ச்ரத்தை வடிவில் நம்மைக் காத்தருளும் ச்ரத்தாலக்ஷ்மிக்கு நமஸ்காரம். சுத்தசைதன்யமாய்த் திகழும் பரம்பொருளாகிய சைதன்யலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

21. பூவுலக வடிவில் விளங்கும் பூதேவி எனப்படும் பூலக்ஷ்மிக்கு, புவர்லோகம், ஸுவர்லோகம் ஆகிய உலகங்களையும் காத்து ரக்ஷிக்கும் புவர்லக்ஷ்மிக்கு, ஸுவர்லக்ஷ்மிக்கு நமஸ்காரம். மூவுலகங்களையும் காத்து ரக்ஷிக்கும் த்ரைலோக்யலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

22. மஹாலக்ஷ்மிக்கு, தன்னை வழிபடும் மாந்தர்க்கு எளிதில் வரங்களை வாரிவழங்கும் ஜனலக்ஷ்மிக்கு, தவங்களின் வாயிலாகப் பெறப்படும் தபோலக்ஷ்மிக்கு நமஸ்காரம். ஸத்யலோகத்தையாளும் ஸத்யலோகலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

23. உலகில் காணப்படும் அனைத்திலும் அவற்றின் தோற்றமாய், நிலையாய், இயல்பாய்,வளர்ச்சியாய் எல்லாநிலைகளிலும் பரிமளிக்கின்ற பாவலக்ஷ்மிக்கு, உலகிலுள்ள அனைத்தின் வளர்ச்சிக்குக் காரணமாய் இருக்கும் வ்ருத்திலக்ஷ்மிக்கு, எது நடக்கவேண்டுமோ அதை முறைப்படி செவ்வனே நடத்தித்தரும் பவ்யலக்ஷ்மிக்கு நமஸ்காரம். வைகுண்டத்தில் அரசாளும் வைகுண்டலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே, உனக்கு நமஸ்காரம்.

24. என்றும் அழிவின்றி நிலைத்திருக்கும் நித்யலக்ஷ்மிக்கு, ஸத்யஸ்வரூபிணியான ஸத்யலக்ஷ்மிக்கு, குலப்பெருமையைக் காத்தருளும் வம்சலக்ஷ்மிக்கு நமஸ்காரம். கைலாஸத்தை ஆளுகின்ற கைலாஸலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

प्रकृतिलक्ष्म्यै श्रीलक्ष्म्यै स्वस्तिलक्ष्म्यै नमो नमः।

नमस्ते गोलोकलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः॥ २५

ப்ரக்ருதிலக்ஷ்ம்யை ஸ்ரீலக்ஷ்ம்யை ஸ்வஸ்திலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே கோலோகலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 25

शक्तिलक्ष्म्यै भक्तिलक्ष्म्यै मुक्तिलक्ष्म्यै नमो नमः।

नमस्ते त्रिमूर्तिलक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः॥ २६

சக்திலக்ஷ்ம்யை பக்திலக்ஷ்ம்யை முக்திலக்ஷ்ம்யை நமோ நம : |

நமஸ்தே த்ரிமூர்த்திலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 26

नमश्चक्रराजलक्ष्म्यै आदिलक्ष्म्यै नमो नमः।

नमो ब्रह्मानन्द् लक्ष्म्यै महालक्ष्म्यै नमो नमः॥ २७

நமச்'சக்ரராஜலக்ஷ்ம்யை ஆதிலக்ஷ்ம்யை நமோ நம : |

நமோ ப்ரஹ்மானந்தலக்ஷ்ம்யை மஹாலக்ஷ்ம்யை நமோ நம : || 27

25. இந்தப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்திற்கும் முதற்காரணமாய் இருக்கும் மூலப்ரக்ருதி மயமாய் விளங்கும் ப்ரக்ருதி லக்ஷ்மிக்கு, ஐச்வர்யங்களையெல்லாம் பொழியும் ஸ்ரீலக்ஷ்மிக்கு, தன்னை வழிபடுவோர்க்கு மேன்மையையும், பொருட்செல்வம், அருட்செல்வம் முதலான அனைத்து செல்வங்களையும் வாரி வழங்கும் ஸ்வஸ்திலக்ஷ்மிக்கு நமஸ்காரம். ஆவினம் காத்தருளும் கோலோகலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

26. சக்தியை அளிக்கும் சக்திலக்ஷ்மிக்கு, பக்தியை அருளும் பக்திலக்ஷ்மிக்கு, முக்தி வேண்டுவோர்க்கு ஸம்ஸாரச்சுழலிலிருந்து விடுதலை அளித்து மோக்ஷத்தையருளும் முக்திலக்ஷ்மிக்கு நமஸ்காரம். பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகள் வடிவாக இருக்கும் த்ரிமூர்த்திலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

27. இயற்கை எனும் ஸ்ரீசக்ரத்தில் எப்பொழுதும் இனிதே வீற்றிருந்து ஆட்சி புரியும் சக்ரராஜலக்ஷ்மிக்கு, அனைத்து சிருஷ்டிக்கும் ஆதாரமாய் விளங்கும் ஆதிலக்ஷ்மிக்கு நமஸ்காரம். ஆத்ம ஸாதனை புரிவோர்க்கு அவர்கள் வேண்டும் பேரின்பப் பெருவெள்ளமாகிய ப்ரஹ்மானந்தத்தை அனுக்ரஹிக்கும் ப்ரஹ்மானந்தலக்ஷ்மியே, மஹாலக்ஷ்மியே உனக்கு நமஸ்காரம்.

## நமசிவாயை ச நமசிவாய

## சிவ ஸ்துதி



मन्माता शशिशेखरो मम पिता मृत्युञ्जयः ।

मद्गुरु न्यग्रोध-द्रुममूल-वास-रसिको मत्सोदरश्शङ्करः ॥

மன்மாதா ச'சிசேகரோ மம பிதா ம்ருத்யுஞ்ஜய: |

மத்குரு ந்யக்ரோத த்ருமமூல வாஸரஸிகோ

மத்ஸோதரச'ங்கர: ||

मद्बन्धु त्रिपुरान्तको मम सखा कैलास-शैलाधिपः ।

मत्स्वामि परमेश्वरो मम गतिर्साम्बशिवो नो इतरः ॥

மத்பந்து த்ரிபுராந்தகோ மம ஸகா கைலாஸ சை'லாதிப: |

மத்ஸ்வாமி பரமேஸ்வரோ மம கதிர்ஸாம்பசிவோ நோ இதர: ||

आदाय दक्षिणकरेण सुवर्णदर्वीं दुग्धान्नपूर्णेन च रत्नपात्रम् ।

अन्नप्रदाननिरतां नवहेमवर्णां अम्बां भजे कनक-भूषण-माल्यशोभाम् ॥

ஆதாய தக்ஷிணகரேண ஸுவர்ணதர்வீம்

துக்தான்னபூர்ணேன ச ரத்னபாத்ரம்

அன்னப்ரதானநிரதாம் நவஹேமவர்ணாம்

அம்பாம் பஜே கனகபூஷண மால்யசோ'பாம் ||

# சிவ ஸ்துதி - பொருள்

என்னுடைய தாய் பிறைச்சந்திரனை சிரஸில் தரித்த சசிசேகரர் ஆவார். என் தந்தையோ காலனை வென்ற ம்ருத்யுஞ்ஜயன். கல்லால மர நீழலில் அமர்ந்து ஸகல உலகுக்கும் ஞானோபதேசம் செய்து கொண்டிருக்கும் இறைவனே எனக்கு ஆசான். சங்கரனே எனக்கு சகோதரனாயிருக்கிறார். முப்புரங்களை எரித்த த்ரிபுராந்தகனே எனக்கு பந்து. கைலாஸ மலையதிபனே எனக்கு நண்பனும் ஆவான். அந்த பரமேஸ்வரனே எனக்கு இறைவனும் ஆவான். அந்த ஸாம்பசிவனைத்தவிர எனக்கு வேறு கதி இல்லை.

பாலன்னம் நிரம்பிய ரத்னபாத்திரத்துடன், தங்கக்கரண்டியைத் தன் வலது கரமேந்திக் கொண்டு, இந்தப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்து ஜீவராசிகளுக்கும் அன்னம் படைப்பதிலேயே ஸதா தன்னை ஈடுபடுத்திக்கொண்டிருப்பவளும், பசும்பொன் நிறத்தவளும், பொன்னாலாகிய ஆபரணங்களையும், மாலைகளையும் தரித்தவளாய் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அன்னை அன்னபூரணியை நான் நமஸ்கரிக்கின்றேன்.

குறிப்பு - இந்த ஸ்லோகத்தைக் கொடுத்து உதவிய திருமதி. சம்பகம் அம்மா அவர்களின் குடும்பத்தாருக்கு நன்றி.

# காணாமல் போன பொருள் உடனே கிடைக்க -

காக்க காக்க கணேச கடோத்கசாய நம:



## கார்த்தவீர்யார்ஜுன ஸ்லோகம்

ஓம் கார்த்தவீர்யார்ஜுனோ நாம
ராஜா பாஹுஸஹஸ்ரவான்|
தஸ்ய ஸ்மரணமாத்ரேண
கதம் நஷ்டஞ்ச லப்யதே||

**குறிப்பு:** இந்த ஸ்லோகத்தைத் தினமும் படிப்பதன் மூலம் காணாமல் போன பொருள் திரும்பக் கிடைத்துவிடும்.